# நூல் விளக்கம்

| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | மாயை! |
| தொகுப்பு | : | சுவாமி பிரபஞ்சநாதன் |
| மொழி | : | தமிழ் |
| வகை | : | தன்னாட்டம் |
| மூன்றாம் பதிப்பு | : | 2022 |
| நூலின் அளவு | : | டெம்மி |
| பக்கங்கள் | : | 35 |
| தாள் | : | A5 (5.83” X 8.27”) |
| எழுத்து அளவு | : | 12 புள்ளிகள் |
| உரிமை | : | அனைவருக்கும் |
| கட்டமைப்பு | : | சாதா பைண்டு அட்டை |
| கணினி அச்சு | : | ஓம் கிராபிக்ஸ் |
| விலை | : | அக விழிப்பு |

# மாயை!

“**இருப்பு**” என்றால் ‘**ஸத்தியம்**’ அல்லது ‘**ஸத்**’ என்று கூறப்படுகின்றது. அத்தகைய ஸத்தியம் ஒன்று மட்டும்தான் இருக்க முடியும்!, அப்படி இருக்க அதை பலவாறாக இருப்பதுப் போன்று காட்டுவது எது?

**ப்ரஹ்மம் சத்யம் ஜகன் மித்யா ஜீவோ ப்ரஹ்மைவ ந பர:**

*‘ப்ரஹ்மம் ஒன்றே உண்மை. இவ்வுலகம் மற்றும் அதில் காணப்படும் அனைத்தும் கானல் நீர் போல் நிலையற்றது. ஜீவாத்மாவிற்கும், பரமாத்மாவிற்கும் வேறுபாடே கிடையாது. இரண்டும் ஒன்றே’.*

அந்த ப்ரஹ்மத்தை தவிர இரண்டாவது தத்துவமே இல்லை என்பதாகும்.

‘**மாறுதலற்ற அந்த பரமாத்மாவே புத்தி மற்றும் அதன் விரிவான இந்த சரீரத்தில் சாக்ஷி ரூபமாய் உள்நுழைந்து, எங்கும் நீக்கமற நிறைந்திருக்கிறார்**’. எனவே, ஜீவாத்மாவிற்கும் பரமாத்மாவிற்கும் வேற்றுமை கிடையாது (இரண்டும் ஒன்றே).

அப்படியிருக்க, அந்த ஸத்தியத்திற்கு வேறான அஸத்தியம் பலவாறாக இருப்பதற்குக் காரணம் எது?

அதுதான் "**மாயை**" என்கின்றது சாஸ்திரம்.

**எல்லாம் மாயை தானா?** என்ற சந்தேகம் நம்மைப் போன்றே விவேகானந்தரின் அத்யந்த பக்தரான **மன்மத்நாத் கங்கூலி** என்பவருக்கும் உண்டானது. அவரும் சுவாமி விவேகானந்தரை நோக்கி இந்தக் கேள்வியைக் கேட்டார்.

அத்வைத சிங்கமான ஸ்வாமி விவேகானந்தரும், உடனே **ஆமாம்!, ஆமாம்! அதிலென்ன சந்தேகம்?** என்று பதில் கூறினார்.

இல்லை!, என்னால் நம்பமுடியவில்லை! இதோ பார்க்கிறேனே! இவற்றை எல்லாம் எப்படி மாயை? என்று கூற முடியும்? விளங்கிக்கொள்ளவே முடியவில்லையே! என்றார் சீடர் **மன்மத்நாத் கங்கூலி**.

"**உனக்கு என்னிடம் ஏதாவது கேட்க வேண்டுமா?**"

"ஆமாம்! **மாயை என்றால் என்ன?** என்று தெரிந்து கொள்ள வேண்டும்."

"அதை விட வேறு எதையாவது கேளேன்"

"ஊஹூம், வேறு எதுவும் தேவை இல்லை. மாயை பற்றித்தான் அறிய வேண்டும்."

‘அவசியம் தெரிந்து கொள்ளத்தான் வேண்டுமா?’

**ஆமாம்!, ஆமாம்!,** அவசியம் தெரிந்து கொண்டே ஆக வேண்டும்.

உடனே விவேகானந்தர் அவரை உற்றுப் பார்த்தார்.

“**இதோ பார்**!, **என்னைப் பார்**!!, **நன்றாகப் பார்**!!!” என்றார் ஸ்வாமிஜி.

சீடர் அவரை உற்றுப் பார்த்தார். மாயைப் பற்றி அவர் பேச ஆரம்பித்தார்.

திடீரென்று எதிரில் இருந்த அனைத்தும் உருகிப் பொடிப் பொடியாக உதிர ஆரம்பித்தது. துகள் துகளாக… இன்னும் சிறிய துகள்களாக, அணுக்களாக, அதிர்வுகள், ஆனந்த நடனங்கள்…

அங்கே, ஒன்றுமே தெரியவில்லை!.

மன்மத்நாத் கங்கூலியால் தாங்க முடியவில்லை! இந்தக்காட்சியை.

சில கணங்களில் அவரை விடுவித்தார் ஸ்வாமிஜி.

தன் இயல்பான நிலைக்குத் திரும்பிய சீடர் விக்கித்துத் திகைத்திருந்தார். பேச முடியவில்லை. ஒன்றும் புரியவில்லை.

**"இப்போது தெரிகிறதா?... மாயை என்றால் என்ன என்று உனக்கு?"**

தலையை ஆட்டினார், அத்துடன் **மன்மத்நாத் கங்கூலி** தனது இந்த அனுபவத்தை அப்படியே எழுதி வைத்துள்ளார். அவரது அனுபவங்கள் **வேதாந்த கேஸரி** பத்திரிகையில் 1960 - ஆம் ஆண்டு ஜனவரி மற்றும் ஏப்ரல் இதழ்களில் வெளியாகியுள்ளன.

விவேகானந்தர் போன்ற மகான்களால் மட்டுமே இப்படி விளக்க முடியும். அதுவும் அந்த சீடர் அதிர்ஷ்டசாலியாக இருந்ததால், அவருக்கு அப்படி ஒரு அதிசய அனுபவம் கிடைத்தது!

**இதுதான் நமக்கும் சந்தேகம்!**

இந்த உலகம் பொய்யா? இதோ நான் காண்கிறேனே!

இந்த வீடு!, இந்த மனிதர்கள்!, பறவைகள்!, மரங்கள்! எல்லாம் பொய்யா...?

**நிற்பதுவே, நடப்பதுவே, பறப்பதுவே, நீங்களெல்லாம்**
**சொற்பனந்தானோ? - பல தோற்ற மயக்கங்களோ?**
**கற்பதுவே, கேட்பதுவே, கருதுவதே, நீங்களெல்லாம்**
**அற்ப மாயைகளோ? - உம்முள் ஆழ்ந்த பொருளில்லையோ?**

**வானகமே, இளவெயிலே, மரச்செறிவே, நீங்களெல்லாம்**
**கானலின் நீரோ? - வெறுங் காட்சிப் பிழைதானோ?**
**போன தெல்லாம் கனவினைப்போற் புதைந்தழிந்தே**
**போனதனால் நானுமோர் கனவோ? - இந்த ஞாலமும்**
**பொய்தானோ?**

**கால மென்றே ஒரு நினைவும் காட்சியென்றே பலநினைவும்**
**கோலமும் பொய்களோ? - அங்குக் குணங்களும் பொய்களோ?**
**சோலையிலே மரங்க ளெல்லாம் தோன்றுவதோர்**
**விதையிலென்றால், சோலை பொய்யாமோ? - இதைச்**
**சொல்லொடு சேர்ப்பாரோ?**

**காண்பவெல்லாம் மறையுமென்றால் மறைந்ததெல்லாம்**
**காண்பமன்றோ?**
**வீண்படு பொய்யிலே - நித்தம் விதிதொடர்ந் திடுமோ?**
**காண்பதுவே உறுதிகண்டோம் காண்பதல்லால் உறுதில்லை**
**காண்பது சக்தியாம் - இந்தக் காட்சி நித்தியமாம்.**

என்று எளிதாக எல்லோரும் புரிந்துக் கொள்ளப் பாடுகிறார் **மகாகவி சுப்ரமணியபாரதி**.

இப்படிப்பட்ட மகாகவி வாக்கை விட வேறு எப்படி? நமது உணர்வுகளைக் கூற முடியும்?

காட்சிப் பிழையா? சொப்பனமா? தோற்ற மயக்கமா? **காண்பதுதான் சத்தியம்!** என்ற முடிவுக்கு வந்து விட்டோம்.

**சரி! மாயை என்பது என்ன?**

மாயத் தோற்றம் என்பதை எளிமையாக பொருள் கொள்ளலாம். அதாவது, **இல்லாததை இருப்பதாக நினைத்து மயங்குவது** என்றும் கூறலாம்.

அத்வைத தத்துவம் மாயையைப் பற்றிப் பேசுகிறது.

நாம் காணும் இந்தப் பிரபஞ்சம் முழுவதும் பிரம்மமே. பிரம்மத்தைத் தவிர இரண்டாவதாக ஒன்றில்லை என்கிறது அத்வைதம்.

மனிதர்கள், மரங்கள், விலங்குகள், புல் பூண்டுகள், அண்ட சராசரங்கள் ஆகிய யாவும் பிரம்மமே என்கிறது அத்வைதம்.

அப்படியானால் நாம் காணும் இந்தப் பொருள்கள் எல்லாம் என்ன? வெவ்வேறு மனிதர்கள், உயிர்கள், சூரியன், சந்திரன், பிற கிரகங்கள் ஆகியவை எல்லாம் என்ன?

**எல்லாம் மாயை** என்கிறது அத்வைதம்.

சகமனைத்தும் பொய்யெனவே தானுணர்ந்தால் துக்க
சுகமனைத்தும் பொய்யன்றோ சோரா - திகபரத்தும்
விட்டுப் பிரியாத மேலான அத்துவிதக்
கட்டுக்குள் ஆவதென்றோ காண்.

**- தாயுமானவர் பாடல்.**

**மாயையின் இரண்டு கருவிகள்**

மாயையை இரண்டு விதமாகப் பிரிக்கிறது அத்வைத தரிசனம்.

**ஒன்று ஆவரணம். இரண்டு விக்ஷேபம்.**

உள்ளதை மறைப்பது, இல்லாத்தைத் தோற்றுவிப்பது ஆகியவையே இவைகள்.

உள்ளது பிரம்மம். மாயை இதை மறைக்கிறது. இல்லாதது உலகம். மாயை இதைத் தோற்றுவிக்கிறது.

மாயையைக் கடந்தால் பொய்யான இந்த உலகம் மறைந்து மெய்யான பிரம்மத்தின் தரிசனம் கிடைக்கும். நாமும் பிரம்மமும் வேறு, வேறு என்று நினைத்த மாய எண்ணமும் மறைந்து போகும் என்கிறது அத்வைதம்.

இந்த மாயையைப் போக்குவது எப்படி? என்பதைப் பிறகு பார்ப்போம்.

இப்போது இந்த மாயையைப் புரிந்துக்கொள்ள முயல்வோம்.

எல்லாமே பொய் என்றால், நாம் காண்பது, அனுபவிப்பது எல்லாமே பொய்யா? மகிழ்ச்சி, துக்கம், வலி, பரவசம், பசி, தூக்கம் எல்லாமே பொய்யா?

காணும் உலகம் பொய்யா? உயிரினங்கள் பொய்யா? சந்திர, சூரியர்கள் பொய்யா? என்னைச் சார்ந்தவர்கள் எல்லாம் பொய்யா? "நான் இருப்பது பொய்யா…?"

ஆம்! என்கிறது மாயாவாதம். எல்லாமே பொய்தான். அது நமக்குத் தெரியவில்லை என்கிறது.

**எப்படி எல்லாமே பொய்யாக இருக்க முடியும்?**

தரையில் ஒரு பாம்பைப் பார்க்கிறீர்கள். அச்சம் ஏற்படுகிறது. அடுத்த நிமிடமே அது கயிறு என்று தெரிந்து விடுகிறது. அப்போது அங்கே பாம்பு மறைந்து விடுகிறது அல்லவா? அதுபோலத்தான் இருப்பது பிரம்மம் மட்டும்தான் என்று உணர்ந்தால், இந்த உலகம் மறைந்துவிடும் என்கிறது அத்வைதம்.

ஒரு குடம் இருக்கிறது. அதற்குள்ளும் ஆகாசம் இருக்கிறது. அதற்கு வெளியிலும் ஆகாசம் இருக்கிறது. குடத்தின் மேல் ஓடு உடைந்தால், வெளியில் உள்ள ஆகாசமும் உள்ளே இருக்கும் ஆகாசமும் ஒன்றாகி விடுகின்றன அல்லவா? அந்த குடத்தின் மேல் ஓட்டைப் போன்றதுதான் மாயை. இப்படி ஒரு விளக்கமும் தரப்படுகிறது.

பெரிய பணக்காரர் ஒருவர் தூங்கும்போது பிச்சை எடுப்பது போலக் கனவு காண்கிறார். கனவில் வருகின்ற வறுமையின் காரணமாக பசியால் அழுகிறார். வேறொருவர் மலையிலிருந்து கீழே விழுவது போலக் கனவு காண்கிறார்.

கனவு காணும்போது அது நிஜம்போல இருக்கிறது. வேதனை, அச்சம் எல்லாமே நிஜமாக இருக்கின்றன. விழித்த பிறகு, அது பொய் என்று தெரிகிறது.

அதுபோலத்தான் மாயை விலகியதும் உண்மை புரிகிறது. இப்படியும் ஒரு விளக்கம் அளிக்கப்படுகிறது.

ஆழத்தில் மறைந்திருக்கும் உண்மையை உணர்ந்ததும், மேற்பரப்பில் தோற்றமளிக்கும் உண்மை மறைந்து விடுகிறது. மேற்பரப்பில் இருப்பது **மாயை.**

கீழே இருப்பது கயிறுதான், பாம்பு அல்ல! என்று உணருவதுப்போல, மேற்பரப்பில் தெரிவது பொய் என்பதை அறிந்தால், பிரம்மமே நித்திய சத்தியம் எனபதையும், நாமே பிரம்மம் என்பதையும் உணரலாம் என்பதே தத்துவ தரிசனம்.

பாம்பாகத் தெரியும் கயிறை உணர அறிவும், விழிப்புணர்வும் தேவை. உலகமாகத் தெரியும் பிரம்மத்தை உணர **ஞானம்** மட்டுமே தேவை. ஞானத்தின் மூலம் நித்தியமான சத்தியத்தை “**இருப்பை**” உணரலாம் என்கிறது அத்வைதம்.

அத்தகைய ஞானம் ஒருவருக்கு உண்டாகும்போது, அறியாமையினால், அவரிடம் ஏற்றி வைக்கப்பட்டிருந்த மூன்று விதமான ‘**ஸத்யம்**’ அறியப்படுகின்றது. இருப்பது ஒன்றேயான “**இருப்பு**” என்றும், அது ஒன்றேயாகிய ‘**ஸத்**’ என்றும் உணரப்படுகின்றது.

அவைகளை, **பிராதிபாஸிக ஸத்யம், வியாவஹாரிக ஸத்யம், பாரமார்த்திக ஸத்யம்** என்பதிலிருந்து, ஒன்றேயான **பாரமார்த்திக ஸத்யம்** வெளிப்படுகின்றது.

கயிற்றில் தெரியும் பாம்பு - **பிராதிபாஸிக ஸத்யம்.**

கயிறு - **வியாவஹாரிக ஸத்யம்,**

பிரம்ம தத்துவம் - **பாரமார்த்திக ஸத்யம்.**

அஞ்ஞான இருப்பு இவ்வாறு, மூன்று விதமாக வெளிப்படுகின்றது.

'**எல்லாம் மாயை, சத்தியமாக எதுவும் இல்லை**' என்று பௌத்த மதம் கூறுவதுப்போன்று, அத்வைதம் கூறவில்லை.

'**பிரபஞ்சமெல்லாம் மாயைதான். ஆனால், இதற்கு ஆதாரமாக பிரம்மம் என்பது பரம சத்தியமாயிருக்கிறது**' என்கிறது அத்வைதம்.

"**உலகத்தை மாயை என்று கூறுவது எந்த விதத்தில் நியாயம்? இந்த உலகத்தில் இத்தனை காரியங்கள் கண்கூடாக நடந்து கொண்டிருக்கும்போது, இதை எப்படி மாயை என்று கூறலாம்?**" என்று பலரும் நினைக்கின்றனர்.

மாயை என்றால் அடியோடு இல்லாத ஒன்று என்று நினைத்துக்கொண்டு இப்படிக் கேட்கிறார்கள். ஆனால் மாயை என்பது அடியோடு இல்லாத வஸ்து (அத்யந்த அஸத்) அல்ல.

**முயல் கொம்பு** அல்லது **மலடி மகன்** என்று கூறினால், உடனே **அது அடியோடு இல்லாத ஒன்று** என்பதினால், அவைகளை தள்ளி விடுகிறோம்.

**மாயை அப்படி அல்ல...!**

அது இருப்பதாக நினைக்கின்றவரை இருப்பதாகவே தோன்றும். அதாவது, அது **முயல் கொம்பு போன்றது அல்ல!** ஆனால், **அது கானல் நீர் போன்றது**.

கானல் நீர் நம் கண்களுக்கு உண்மையாகத் தெரிகிறது. ஆனால், உண்மையாகவே அதில் நீர் இல்லை. அதைக் குடித்து நாம் தாகம் தீர்த்துக் கொள்ள முடியாது.

கானல் நீர் உண்மையான நீர் அல்ல! அதே சமயம், அதை அறிந்தவர்களுக்கும்கூடக் கானல் நீர் காட்சிக்கு இருக்கத்தான் செய்கிறது.

அவ்விதமே இந்த உலகை மாயம் என உணர்ந்த ஞானிகளுக்குக் கூட, இந்த உலகம் இருக்கத்தான் செய்கிறது. ஆனால், அவர்களைப் பொருத்தவரை அது நிரந்தர உண்மையல்ல! என்பதை அவர்கள் அறிவார்கள்.

ஒரு கயிற்றைப் பார்த்து பாம்பென்று தவறாக எண்ணுகிறோம். கயிற்றில் பாம்பு இல்லை என்பது உண்மை. இருந்தாலும்கூட, அதைப் பாம்பாக எண்ணியவரையிலும்

உண்மையில் இல்லாத பாம்பே, இருப்பதாகத் தோன்றி, பயத்தையும், பதற்றத்தையும் நம்மிடம் உண்டாக்கி விடுகிறது.

பாம்பு உண்மையாகவே இல்லாத போதிலும், நமக்கு வியர்த்து விறுவிறுத்து போகின்றது. நாம் அந்த பாம்பைக்கண்டு பயம் அடைந்ததும் உண்மையே.

அதுப்போல, உலகம் உண்மையில் இல்லாதபோதிலும், அதையே நாம் சத்தியமாக எண்ணுகிறவரை, இவ்விதமே இவ்வுலகத்தில் சகல காரியங்களும் நடைப்பெறுகின்றன.

கயிற்றை கயிறு என்று தெரிந்துக் கொண்டவுடன் நம்முடைய பயம் பறந்துவிடுவதுப் போன்று, இந்த உலகமும் பிரம்மத்தைச் சார்ந்த ஒரு தோற்றமே, அதற்கும் ஆதாரமான பிரம்மம் ஒன்றே உண்மை என்று அறிகின்றபோது, அனைத்து காரியங்களும் உண்மையில் நின்று போகின்றன.

அடியோடு இல்லாதது அல்ல! இந்த உலகம். ஞானம் வருகிற வரையில் உள்ள தோற்றம் அது.

கனவு காண்கிற வரையிலும் அந்தக் கனவு உண்மையாகவே இருந்து, நாம் விழித்துக் கொண்டபின் அந்தக் கனவு பொய்யாகிப் போவதுப் போன்று, நாம் விழிப்பு நிலையில் அறியாமையில் உறங்கிக் கொண்டிருந்த வரையிலும் இந்த உலகம் உண்மையாகவே இருந்து, நாம் ஞான நிலையில் விழித்துக் கொண்டவுடன் இந்த உலகம் நம் அறிவில் மட்டுமே மறைந்து போகிறது.

அதாவது, கானல் நீர் எப்படி? நம் அறிவுக்கு உண்மையல்ல! என்ற **ஞானம்** (அறிவு) உண்டாக்குகின்றதோ, அவ்வாறே, இந்த உலகம் உண்மையல்ல! என்ற **ஞானம்** (அறிவு) உண்டாகி விடுகின்றது.

இவ்வாறு, அது பொய்யாக இல்லாமல், தோன்றி மறைகின்ற தற்காலிக உண்மையாக உள்ள உலகத்தை **'அத்யந்த அஸத்'** என்று கூறாமல், **'பிராதி பாஸிக ஸத்தியம்'** என்கிறோம்.

கிளிஞ்சலின் மீது வெயில் ஏறியவுடன், அது வெள்ளி போன்று மினுமினுப்பது நன்றாகத் தெரிகின்றது. அவ்வாறே, பிரம்மத்தின்மீது மாயை உண்டானவுடன், இந்த உலகம் தற்காலிகமாக ஏற்றிவைக்கப்பட்டு மினுமினுக்கிறது!

மாயை என்பது ஞானிக்குப் பொருத்தவரை பூஜ்யம்தான். அந்த பூஜ்ஜியத்தில் ராஜ்ஜியத்தை ஏற்றி வைத்துக் கொள்வதுதான் மாயை. அதாவது, **ஞானம்** வராத நிலையில் உள்ள ஜீவன் தன்னை ஒரு தனிப்பட்ட நபராக கருதிக்கொண்டு அதில் இந்த மாயையை என்ற **"நான்"** ஒன்றை (1) வைத்துக்கொண்டு, பக்கத்தில் பூஜ்ஜியத்தைச் (0) சேர்த்துக் கொள்கிறான்.

ஓர் இலக்கத்துக்குப் பக்கத்தில் வருகிற பூஜ்யம் அதைப் பத்து, இருபது, நூறு, ஆயிரம் என்று ஆக்குவதுப்போன்று,

இந்த அஞ்ஞானிக்கு மாயையே பலவாக விரிந்து சத்திய வஸ்துக்களாக, இந்த உலகமாகத் தோன்றுகிறது.

அவ்வாறு, உலக விவகாரங்களில் ஈடுபாட்டுடன் அறிபடுபவனோடு சேர்ந்து நீக்கப்படவேண்டியது **வியாவஹாரிக ஸத்யம்** எனலாம்.

இந்த உலகத்தை நீக்க வேண்டுமானால், நம்மை நீக்க வேண்டும்.

கனவுக்குள் போகும்போது, இந்த **உலகமும், நாமும்** என இரண்டும் நீக்கப்படுகிறது.

இந்த ஞானம் வந்த பிறகு நாம் பார்ப்பதெல்லாம் காட்சிதான், விவகாரத்திற்கு பயன்படாது என்ற அறிவு ஏற்படும். இந்த ஞானம் வந்த உடனே வியாவகாரத்தில் உள்ள **ஸத்யம்** போய் விடும். விஸ்வனாக இருக்கும்போதே ஆத்ம ஞான நிலைக்கு செல்லும்போது, இந்த **வியாவஹாரிக ஸத்யம்** இல்லாமல் போகும்.

வியாவஹாரிகம் இரண்டு வகையாக பிரிக்கப்படுகிறது.

1. ஞ்யாத ஸத்தா, (தெரிந்த உண்மை),
2. அக்ஞாத ஸத்தா (தெரியாத உண்மை).

**<u>ஞ்யாத ஸத்தா:</u>**

இது பிரத்யக்ஷ பிரமாணம்.

<u>உ-ம்:-</u> நான் இருக்கும் இந்த ஊர் எனக்குத் தெரிகிறது. இது நாம் விவகாரத்தில் அறியப்படும் பொருள். எனவே, தெரிந்துக் கொண்டிருக்கும்.

**<u>அக்ஞாத ஸத்தா:</u>**

<u>உ-ம்:-</u> காசி இருக்கிறது. ஆனால் எனக்குத் தெரியவில்லை.

அனுமானம் மூலமாக ஒன்றை தெரிந்து கொள்வது. நம்மால் அறியப்பட்டிருக்கிறது ஆனால், இப்போது இங்கே அந்த ஊர் இல்லை.

ஆகவே, நம்முடைய விவகாரத்தில் இருப்பதை வைத்துக்கொண்டு, அதை **ஸத்தியம்** என்று கருதுகின்றோம்.

ஆக, ஒன்றை சார்ந்திருந்தால் அது, '**மித்யா**' எனப்படுகின்றது. எதையும் சாராமல் தனித்து இருப்பது எதுவோ, அதுவே, "**ஸத்யம்**" எனப்படுகின்றது.

ஞானி மட்டுமே உள்ளதை உள்ளபடி பார்க்கிறான்.

அதாவது, ஒரே சர்க்கரையினால் பலவிதமான சர்க்கரை மிட்டாய் பொம்மைகள் செய்திருப்பதுப்போன்று, ஒரே பிரம்மம் இத்தனை விதமாக ஆகியிருக்கிறது.

சர்க்கரையினால் **பாகற்காய் பொம்மை** செய்து வைத்திருப்பதைப் பார்த்து, விசயம் தெரியாத குழந்தை **அது கசக்கும்** என்று ஒதுக்கப்பார்க்கும்.

ஆனால், கசப்பு வஸ்துவாகத் தோன்றுகின்ற அதுவும் உண்மையில் இனிப்பான சர்க்கரைதான். இருப்பினும், அந்தக் குழந்தையின் அறியாமை அதை ஏற்க மறுக்கின்றது.

**உலகம் எல்லாம் ஆனந்த மயமான பிரம்மம் ஒன்றே!** என்று ஞானி மட்டுமே அறிவான்.

குழந்தைக்கு கசப்பாகத் தெரியும் அந்த மிட்டாயை பெரியவர்கள் **இனிப்பு** என்று அறிவார்கள்.

அதுப்போன்றுதான் நமக்கு கசப்பாகத் தெரிவது, ஞானிக்கு இனிப்பாகத் தெரியும். '**நமக்குக் கறுப்பு, ஞானிக்கு வெளுப்பு. நமக்குப் பகல், ஞானிக்கு இருட்டு**' என்று பகவான் ஸ்ரீகிருஷ்ணர் தமது கீதையில் தெளிவுபடுத்துகிறார்.

**பிரம்மம் என்கிற வெளிச்சமே நமக்கு இருட்டாக இருக்கிறது. இருட்டான மாயைதான் நமக்கு வெளிச்சமாக தெரிகிறது.**

இதெப்படி முடியும்? என்று கேட்கலாம்.

மாயையும் பிரம்மத்தைச்சார்ந்து அதனிடமிருந்து சிறிது பிரதிபலிப்பான ஒளியைப் பெறுகிறது.

இந்தக்குறைந்த ஒளிதான் நம் குறைந்த அறிவுக்கு எட்டுகிறது.

குறைவான வெளிச்சத்தில்தான் புத்தகத்தின் கறுப்பு எழுத்துக்கள் தெளிவாகத் தெரியும். அதுவே, ஜொலிக்கிற பிரகாசமான வெளிச்சத்தின் அருகே புத்தகத்தைப் பிரித்தால், அங்கே எழுத்துக்களே தெரியாது. வெளிச்சம் மட்டுமே பிரகாசமாகத் தெரியும்.

அதுப்போன்று, நமக்கு மாயையின் அற்பப் பிரகாசத்தில் உலக காரியங்கள் உண்மைபோன்று தெரிகின்றன. ஞானியின் ஆத்ம பிரகாசத்தில் அவைகள் மறைந்து போகின்றன.

**ஞானியின் பகல் நமக்கு இரவு!** என்பதன் பொருள் இதுதான்.

நாம் எல்லோரும் பரம்பொருளை பற்றிய உண்மையான ஞானத்தைப் பெற முயல வேண்டும். **இந்த ஞானம் என்பது என்ன?** பரம்பொருளைத் தவிர, வேறெதுவுமே இல்லை என்பதுதான்.

அந்த ஒன்றே இத்தனையாகவும் தோன்றுகிறது.

இத்தனையான தோற்றங்களிலேயே மனதை செலுத்திக் கொண்டிருந்தால் **சஞ்சலம், ஏற்றத்தாழ்வு** போன்றவைகளால்

உண்டாகும் கஷ்டங்கள் எல்லாம் ஏற்பட்டுக் கொண்டேதான் இருக்கும்.

இத்தனை தோற்றத்திலிருந்தும் மனதைத் திருப்பி, இவற்றுக்குக் காரணமான ஒன்றையே அறியத்தொடங்கினால், அனைத்து எண்ணங்களும் அந்த ஒன்றேயான அறிவிடம் அடிபணியும்.

அதாவது, ஒரே வஸ்து என்றபின், அங்கு சஞ்சலம் அடையவோ, ஏற்றத்தாழ்வுக்கோ இடம் ஏது?

அந்த நிலையிலேயே நித்திய சுகத்தைப் பெறலாம்.

இந்த நிலையைத்தான் "**ஞானம்**" என்கிறோம்.

கிணற்றுக்குள்ளிருந்து, நீர் நிரம்பிய குடத்தை இழுக்கும் போது அதன் கனம் தெரிவதில்லை. ஆனால் தண்ணீர் மட்டத்துக்கு மேலே, அந்தக்குடம் வந்தவுடன் கனக்க ஆரம்பித்து விடுகிறது. அவ்வாறே, எளிதில் புரட்ட முடியாத பெரிய மரங்களை ஆற்று வெள்ளத்துக்கு அடியாகத்தான் புரட்டி எடுப்பது அன்றைய வழக்கம்.

அதேப்போன்று, நம் துக்கங்களையெல்லாம் **ஞானம்** என்கின்ற தண்ணீரில் அமுக்கி விடவேண்டும். அப்போதும் துக்கத்திற்கு காரணமான அனைத்து விசயங்களும் இருக்கத் தான் செய்யும். ஆனால், நீருக்குள் இழுக்கப்படுகின்ற குடம் போன்று, அந்த துக்கங்கள் எல்லாம் **ஞானம்** என்ற தண்ணீரில் பரம லேசாகிவிடும்.

துக்கம் என்பது தன்னைத் தொடாமல் எவன் ஒருவன் இருக்கிறானோ! அவனே **யோகி,** அவனே **ஞானி.**

அதாவது, மனதின் அசுத்தங்கள்தான் துக்கத்திற்குக் காரணம். மனதில் உள்ள அசுத்தங்கள் எல்லாம் நீங்கினால், அது தானாகவே பரமாத்மாவின் (அறிவின்) பக்கம் திரும்பி விடும்.

நம்முடைய ஒழுக்கத்தினாலும், கட்டுப்பாட்டினாலும் தான் மனதின் அசுத்தங்களை அகற்ற முடியும். இந்தச் சரீரக் கூட்டிலிருந்து உயிர் பிரிந்து போவதற்கு முன்பு, சரியான கல்வியின் மூலமும், தொடர்ந்த அப்பியாசத்தின் மூலமும், கட்டுப்பட்டு ஒழுங்காக வாழ்ந்து, அசுத்தங்களைப் போக்கிக் கொள்ள வேண்டும்.

அப்படி அழுக்கு அடையாத மனதைக் கொண்டவனே யோகி (ஞானி) எனலாம்.

**யோகிக்கு அடையாளம் என்ன?**

பரமாத்மாவைச் சேர்ந்துவிட்ட அவனது மனம், வேறு எதையுமே சேர்த்துக்கொள்ள நினைக்காது.

மனது இங்கும், அங்கும் ஓடவே முடியாத நிலைக்கு உயர்ந்து விட்டதானால், அந்த மனதினால் உண்டாகியிருக்கிற அத்தனை தொந்தரவுகளும் தொலைந்து போகும்.

அந்த நிலையைப் பெறுவதற்கு **மனம் எதைச் சேர வேண்டும்?**

மனம் எதிலிருந்து உற்பத்தியானதோ, அதைத்தான் போய்ச் சேரவேண்டும்.

அதாவது, **மனம் உதித்த இடத்தில் ஒடுங்கி விட்டால்,** அங்கேயே, அப்படியே கரைந்து போய்விடும். அதற்கப்புறம், அது ஓடவே ஓடாது. அதுவே, சகல தொல்லைகளிலிருந்தும் விடுபட்ட நிலை.

நதி இருக்கிறது. **அதன் மூலம் எது?**

அதாவது, நதி உண்டான இடம் எது?

**கடல்.**

எப்படி...?

அதாவது, கடல் நீர்தான் ஆவியாகப்போய், மழையாக மாறி மண்ணில் நன்கு கொட்டித்தீர்த்து விடுகின்றது, அவ்வாறு, அடிக்கடி கொட்டிக் கொண்டுள்ள இடத்திலிருந்து ஊற்று நீராக, நதியாக ரூபம் எடுக்கிறது.

அந்த ஆறு ஓடாத ஓட்டமில்லை. இப்படி ஓடி, ஓடிக் கடைசியில் தன் மூலமான கடலில் வந்து கலந்து விழுகிறது.

அப்புறம் அதற்குத் **தனி ரூபம்** உண்டா?

அல்லது **ஓட்டம்தான் உண்டா?**

ஒன்றும் இல்லை!...

இப்படி நதிகளுக்கெல்லாம் மூலமாக இருந்து, முடிவில் இவற்றைத் தன்னிலேயே சேர்த்துக் கொள்கிற கடல்போன்று, மனது தன்னுடைய மூலத்திற்கு (அறிவுக்குத்) திரும்பியாக வேண்டும்.

சமாதி நிலையில் ஞானிகளும், யோகிகளும் தங்கள் தனி மனதைக் கரைத்துவிட்டு, வெளிப்பிரக்ஞையே இல்லாமல் இருக்கும்போதே, அந்த வஸ்துவிடம்தான் சேர்ந்திருக்கிறார்கள்.

சமாதி நிலைக்கு அப்புறம் ஒரு யோகி அந்த வஸ்துவை விட்டுவிட்டதுப்போன்று, நமக்குத் தோன்றினால்கூட உண்மையில் அது அறிவின் நீங்காத சேர்க்கைதான்.

உள்ளூர அவருக்கு அந்த அறிவின் (ஆன்மாவின்) சேர்க்கையின் அநுபவமேதான் இருந்து கொண்டிருக்கும். அவரது அனுபவங்கள் எதுவும் அந்த அறிவுக்கு வேறாக இருக்க முடியாது.

அதனால்தான் அவர் வெளிப் பிரக்ஞையோடு இருக்கிற மாதிரி நமக்குக் தோன்றுகிற போதும்கூட, **அதை அடைய வேண்டும், இதை அடைய வேண்டும்** என்கிற **ஆசை அவருக்கு மட்டும் இல்லை.**

ஏதாவது ஒன்று தனக்கு வேண்டுமென்று ஒருத்தனுக்குத் தோன்றிவிட்டாலும்கூட அவன் யோகி இல்லை அல்லது ஞானி இல்லை. ஆம்! அவன் அந்த ஆன்மாவை (அறிவை) அடைய வில்லை என்றுதான் அர்த்தம்.

அதாவது, மனம் தனித்து நிற்கின்றது, அது அதனுடன் (அறிவுடன்) ஒன்றாக இணையவில்லை என்று பொருள்.

யோகியின் அடையாளத்தை வேறு விதமாகவும் கூறலாம். அதாவது அவனுடைய சித்தம் பரமாத்மாவிடமே நிலைத்து விட்டது என்றால், அதற்கப்புறம் எந்தப் பெரிய துக்கம் வந்தாலும்கூட, அது துளிக்கூட அவனை ஆட்டிப் படைக்காது. எந்த துக்கமானாலும், அதனால், ஆடக்கூடாது, அசையக்கூடாது, அழக்கூடாது. அப்படி இருப்பவனே ஞானி. இப்படியில்லாமல், சித்தம் சிறிது சலித்து விட்டால்கூட அவன் பரமாத்மாவை அடையவில்லை என்றே அர்த்தம்.

அதேசமயம், யோகிக்கும், ஞானிக்கும் அநேக துக்கங்கள் வரும். அதாவது, ஊர் உலகத்துக்கெல்லாம் அது துக்கமாகத் தோன்றும். ஆனால், அவனுக்கு மட்டும் அது துக்கம் என்பதாகத் தெரியாது.

பட்டினத்தார், ஆதிசங்கரார் போன்றவர்கள் தாயின் இறப்பில் அத்தகைய துக்கத்தை வெளிப்படுத்தினார்களே என்றால், அவர்கள் நமக்காக வாழ்ந்து காட்டினார்கள்.

அதாவது, தாயை தனையன் என்றுமே மறந்து விடக் கூடாது. அவள் இருக்கின்றவரை அவளுக்குப் பல உதவிகள் செய்தும், அவள் இறந்தவுடன் இறுதிச்சடங்குகளை சரியாகச் செய்தும், அவளிடம் இருந்து உதிரமாக இந்த உடல் பெற்றக் கடனை அவளுக்கு சேவைகள் செய்து திருப்பி அடைக்க வேண்டும் என்றும் வாழ்ந்து காட்டினார்கள்.

யோகி - ஞானி ஒருவன்தான் **பூரணப் பிரக்ஞையோடு** இருக்கிறவன்.

அவன் ஸதா ஆனந்தமாக இருக்கிறவன். அவனை மட்டுமே "**சதானந்தம்**" என்று கூறமுடியும். அவன் ஒருவன் மட்டுமே அது வேண்டும், இது வேண்டும் என்பதேயில்லாமல் எப்பொழுதும் ஆனந்தமாக இருப்பவன்.

ஞானிக்கும், யோகிக்கும் பெரிய வித்தியாசம் ஒன்றும் இல்லை. **ஞானி** என்பவன் தன்னையறிந்து தன்மயமானவன். **யோகி** என்பவன் அந்த ஏக அறிவுடன் இரண்டறக் கலந்தவன்.

இந்த இருவரிடமும் இயல்பாகவே கருணை மட்டுமே காணப்படும். யாரிடத்திலும் **கோபம், வெறுப்பு** வரவே வராது. மற்றொரு உயிரினத்திற்கு **ஹிம்ஸை** செய்யக்கூடிய எண்ணம் என்றுமே இவர்களுக்கு இருக்காது. **அஹிம்ஸை** மட்டுமே அவர்களிடத்தில் இருக்கும். வெளி உலகத்தின் பார்வைக்கு அவர்கள் என்னென்ன காரியங்கள் செய்தாலும், அதிலெல்லாம் அவர்களுக்கு '**தான் செய்கிறோம்**' என்ற அகங்கார எண்ணம் என்றுமே இருக்காது.

சொந்தப்பற்றே இல்லாமல், பரம காருண்யம் மட்டுமே அவர்களுடைய காரியங்களில் இருக்கும். சில சமயங்களில் வெளியிலே தெரிகின்ற காரியங்கள் நம்முடைய பார்வைக்கு கடுமையாகத் தெரிந்தாலும்கூட, அவர்களைப் பொருத்தவரை உள்ளுக்குள்ளே **பரம காருண்யம்** கொண்டவர்களாகவே இருப்பர்.

இந்த ஜகத் முழுதும் **காரணம் - விளைவு, செயல் - பிரதிச்செயல்** என்ற இருமைகளுக்குள்தான் கட்டுண்டிருக்கிறது.

**ஜடப் பிரபஞ்சம், ஜீவப் பிரபஞ்சம்** என்ற இரண்டும் ஒரே மூலத்திலிருந்தே வந்ததால், **ஜகத்துக்கு உள்ள இந்த விதி, மனித வாழ்விலும் உண்டு.**

இதில், "**நான் செய்கிறேன்**" என்ற அஹங்காரத்துடன் கூடிய நம் செயலுக்கெல்லாம் நிச்சயமாகப் **பிரதிபலன்** உண்டு. இன்று நாம் அநுபவிக்கின்ற சுக, துக்கங்களுக்கும் காரணம் நாம் முன்னமே இந்தப் பிறவியிலோ, அல்லது முற்பிறவியிலோ செய்த நல்லது, கெட்டதுகள்தான் ஆகும்.

ஒருவர் செய்கிற கர்மம் (செயல்), அதன் பலன்கள் என இவையே மனித வாழ்வின் **சுக துக்கங்களுக்கு** முதற் காரணம். இதற்கு, துணைக்காரணமாக மட்டுமே துயரங்களாக **தெய்வ குற்றம், ஆரோக்கியக்குறைவு** போன்றவைகள் அமைகின்றன.

**ஜாதக ரீதியில், வைத்திய ரீதியில்**, அல்லது **மாந்திரீக ரீதியில்** என எப்படி வேண்டுமானாலும் ஒருவன் **பரிகாரம்** தேடிக் கொள்ளலாம். ஆனால், அவைகள் எல்லாமே அவனுடைய **கர்மா (செயல் விளைவுகள்)** தீருகின்றபோது மட்டும்தான் உண்மையில் பலன் தரும்.

**பகவான் விட்டவழி** என்ற பயபக்தியோடு, நம்முடைய வாழ்க்கையை **ஈஸ்வரார்ப்பணம்** செய்துவிட்டுப் பேசாமல் இருக்கின்ற பக்குவம் வந்தால் மட்டுமே, எல்லாவற்றையும் இறைவனிடம் ஒப்படைத்துவிட்டு, **என்னாலாவது ஒன்றுமில்லை!**

**எல்லாமவன் செயலே!** என்று ஒன்றும் செய்யாமல், அல்லது ஒன்றும் பேசாமல் அமைதியாக இருக்க முடியும்.

அதுவே பெரிய பரிகாரம். **அதுவே, உண்மையான பரிகாரம்** என்றும் கூறலாம்.

பூர்வ கர்ம செயல்கள் எப்படிக்கொண்டு போனாலும், இனிமேலாவது, கர்ம பாரம் நம்மீது ஏற்றிக் கொள்ளாமல் பார்த்துக் கொள்வதே! மிகவும் முக்கியம். பழையதற்குப் பரிகாரம் தேடுவதைவிட, புதிய சுமைகள் சேராமல், பாவம் பண்ணாமல் இருப்பதற்கு **ஈஸ்வரனைத் துணைகொள்வதே** நல்லது.

பூர்வ கர்மத்தால் இப்போது ஏற்பட்டுள்ள துக்கத்துக்கும் உண்மைப்பரிகாரம் என்பது **ஈஸ்வரதியானம்** மட்டும்தான். இனிமேல் துக்கத்துக்கு விதைப்போட்டுக் கொள்ளாமல், இருக்கிற உபாயமும் **ஈஸ்வரதியானம்** மட்டும்தான்.

**ஈஸ்வரதியானம் என்பது எதற்கு?**

அந்த ஈஸ்வரன்தான் நாமாக ஆகியிருக்கிறார்.

அதாவது நம்முடைய நிஜ ஸ்வரூபம் அவரேதானென்று கண்டுபிடித்துக் கொள்வது ஒன்று மட்டும்தான் மனித வாழ்வில் மகத்தான இலட்சியம் எனலாம்.

நாம் என்னவென்று? நம்மை எப்படிக் கண்டுபிடித்துக் கொள்வது?

தெரியவில்லையே! என்றால், **ஈஸ்வரன்** என்று சகல கல்யாண குணங்களைக்கொண்ட ஒருத்தனைப் பற்றிக் கூறுகின்றோமே, அவன் வேறு யாருமில்லை. அதுவே **மாயை** என்று அறிந்துக் கொள்ளுங்கள். அத்தகைய மாயை எப்படிப்பட்டது? என்பதை அறிந்து, அந்த **மாயா ஈஸ்வரனை** அனுதினமும் தியானித்துக் கொண்டிருந்தாலே போதும்.

தியானித்தல் என்பது, இங்கு நடைபெறுகின்ற செயல்கள் அனைத்தும் அந்த மாயையின் செயல்களே!, அதாவது *அனைத்தும் ஈஸ்வரக்காரியமே என்று தன் புத்தி சக்தியால் சிந்தித்து, இதில் என் செயலாவது ஏதுமில்லை! என்றுணர்ந்து, '**நான்**' என்ற அஹங்காரத்தை இழந்து, அவனுக்குத் தக்கபடி சரியாக நடந்துக் கொள்வதே மாயையின் பிடியில் இருந்து விடுபடுதல் என்பதாகும்.*

அவனும், நாமும் ஒன்று என்பதால், அவனே, நமக்கு நம்முடைய (அவனுடைய) நிஜ ஸ்வரூபத்தை அநுக்கிரகித்து விடுவான். அப்படி நாமும், அவனும் ஒன்றாகிவிடுகின்றபோது ஸகல குணங்களும் இல்லாமல்போய் நிர்குணமாகி விடுகிறோம்.

அதுவே, நிர்குண ஸ்வரூபமாகிய **பிரம்மானந்த நிலை** எனலாம்.

துக்கம் தருவதாக இன்னொரு வஸ்துவே இல்லை! என்ற **அத்வைத அநுபவம்** சித்திப்பதே! இதன் முடிந்த முடிவான **உண்மையான துக்க பரிகார நிலை** என்றும் கூறலாம்.

*அங்கே துக்கமும் இல்லை. சுகமும் இல்லை. இரண்டுக்கும் ஆதாரமான* ***ஸத்தியம்*** *மட்டும் ஸ்வயம் பிரகாசமாக இருக்கும்.*

"**பிரம்மம் பூரணமானது; உலகமும் பூரணமானது; பிரம்மம் என்ற பூரண வஸ்துவில் உலகம் என்ற பூரணம் உதயமாயிற்று; உலகம் என்ற பூரணத்தைப் பிரம்மம் என்ற பூரணத்திலிருந்து எடுத்துவிட்ட போதிலும், பிரம்மம் பூரணமாகவே இருக்கிறது**" என்று உபநிஷத மந்திரம் உரைக்கின்றது.

**பூரணம்** என்றால் **முழுமை** என்று பொருள்.

எப்படி? இரண்டு வஸ்துக்கள் இருப்பது முழுமையாக முடியும்? பூரணத்திலிருந்து பூரணத்தைக் கழித்த பின்னும் எப்படிப் பூரணம் மிஞ்ச முடியும்? என்ற கேள்வி எழுகிறது.

இந்த மந்திரத்தின் உண்மையான தாத்பரியம் என்ன?

உலகம் உண்மையில் பிரம்மத்திலிருந்து வேறாகப் பிரிந்து வெளியே வந்துவிட்ட வஸ்து அல்ல. பிரம்மமேதான் உலகமாகத் தோன்றுகிறது. பிரம்மம் வேறேதோ பொருள்களைக் கொண்டு உலகை சிருஷ்டிக்கவில்லை. அதேசமயம் பிரம்மம் உலகமாக மாறிவிடவும் இல்லை.

**பிரம்மம் உலகமாகத் தோன்றுகிறது அவ்வளவுதான்.**

இதைத்தான் **மாயை** என்கிறோம்.

இருட்டிலே ஒரு கயிற்றைப் பார்த்துவிட்டுப் பாம்பு என்று நினைக்கிறோம். இப்போது, கயிறே பாம்பாகத் தோன்றுகிறது. உண்மையில் கயிறு பாம்பாக மாறவில்லை. அவ்வாறே கயிறு பாம்பைப் படைக்கவும் இல்லை.

பாம்பாக எண்ணியபோது அது முற்றிலும் (பூரணமாக) பாம்பாகத்தான் தெரிகிறது. கயிறு என்று தெரிந்து கொண்டால், பூரணமாக கயிறாகவே இருக்கிறது. கயிறு என்ற பூரணத்தில் பாம்பு என்ற பூரணம் உதயமானதுப்போன்று, பிரம்ம என்ற பூரணத்தில் உலக என்ற பூரணம் தோன்றுகிறது.

அதாவது ஒரு நிலையில் கயிறே பூரணம். இன்னொரு நிலையில் பாம்பே பூரணம். ஆக, அங்கு இரண்டு இருந்தால் அது பூரணம் இல்லை. ஒரே ஒரு பூரணம் இரண்டு சமயங்களில், இரு விதங்களில் பூரணமாகத் தெரிகிறது.

**இது தோற்ற மாயை!**

கயிற்றில் பாம்பு என்ற தோற்றம் ஏற்பட்டதால், அப்போது அதன் எடை கூடிற்றா என்ன? இல்லை அல்லவா?...

பாம்பு என்ற தோற்றம் அழிந்து, இது கயிறுதான் என்ற தெளிவு ஏற்பட்டபோது, கயிற்றின் எடை குறைந்ததா என்ன? அதுவும் இல்லை!.

அவ்வாறே, பிரம்மத்தில் இந்த உலகத்தைக் கூட்டினாலும், குறைத்தாலும் அது மாறாமல் பூரணமாகவே இருக்கிறது.

**“அலங்கலில் தோன்றும் பொய்ம்மை அரவாக”** இருப்பதே உலகம்! என்றார் கம்பர்.

அரவை (பாம்பை) அலங்கலிலிருந்து (மாலையிலிருந்து) கழித்த பின்னும் அது பூரண அலங்கலாகவே இருக்கிறது. இதுதான் உபநிஷத் சொன்னபடி பூரணத்திலிருந்து பூரணத்தைக் கழித்த பின்னும் எஞ்சியிருப்பது பூரணம் மட்டுமே.

மாலை ஏன் பாம்பாகத் தெரிந்தது? இருட்டினால் அப்படித் தெரிந்தது. மாயை என்கிற இருட்டில்தான் பிரம்மம் உலகமாகத் தெரிகிறது.

இல்லாத வஸ்துவான மாயைதான் இருக்கிற ஒரே வஸ்துவான பிரம்மத்தைப் பலவறான பிரபஞ்சமாகப் பெருக்கிக் காட்டுகிறது.

இல்லாத வஸ்துவால் இப்படிச் செய்ய முடியுமா? என்று கேட்பீர்கள்.

‘**மாயா**’ என்றாலே அந்தச் சொல்லுக்கு ‘**எது இல்லையோ அது**’ என்றுதான் பொருள்.

பிரம்மம் மாயா சக்தியால் தன்னை எல்லையில்லாத பல வஸ்துக்களாகத் தோன்றுகிற இந்தப் பிரபஞ்சமாகக் காட்டிக் கொள்கிறது.

படைப்பில் எத்தனை வகைகள்? அதுப்போன்று, நம் மனதும் எத்தனை வகைகளில் ஓடுகிறது? இவற்றிற்கு முடிவே இல்லை. அனந்தம்தான்.

**ஓம் பூர்ணமத: பூர்ணமிதம்**
**பூர்ணாத் பூர்ண முதச்யதே**
**பூர்ணஸ்ய பூர்ண மாதாய**
**பூர்ணமேவா வசிஷ்யதே**
**ஓம் சாந்தி: சாந்தி: சாந்தி:**

இறைவன் முழுமையானவர்.

இந்த உலகம் முழுமையானது.

முழுமையான இறைவனிலிருந்தே முழுமையான உலகம் தோன்றியுள்ளது. முழுமையிலிருந்து முழுமையை எடுத்த பின்பும் முழுமையே எஞ்சியுள்ளது!

முதலில் சொன்ன உபநிஷத் மந்திரத்தில், பிரம்மத்தைப் பூரணம் என்று கூறியபோது, அது **மாறாத அனந்தம்** என்றும், பிரபஞ்சத்தைப் பூரணம் என்கிறபோது, அது **மாறிக் கொண்டே இருப்பதில் அனந்தம்** என்றும் கொள்ளலாம்.

மாறிக்கொண்டே இருக்கிற வஸ்து ஸத்தியமாக இருக்க முடியாது. ஒன்று, இரண்டு, மூன்று, கோடி, பத்துகோடி என்று அதற்கு நாம் மதிப்புத் தந்தாலும், உண்மையில் அது அசத்தியம்தான். இல்லாத வஸ்துதான்.

அனந்தமாக இருக்கிற பிரம்மம் ஒன்றே சத்தியம் என்கிறது **அத்வைதம்.**

அனந்தமாகத் **தெரிகிற** பிரபஞ்சமும் சத்தியம் என்கிறது **துவைதம்.**

பிரம்மம், பிரபஞ்சம் என்ற பேதமில்லாமல் எல்லாமே **சூனியம், பூஜ்யம், மாயை** என்கிறது **பௌத்தம்.**

**அதாவது, பிரம்மம் என்பது சத்தியம் என்று சொல்வது** அத்வைதம். **எல்லாம் மாயை என்பதோடு நிற்கிறது** பௌத்தம். **பிரபஞ்சத்தை சத்தியமாகச் சொல்கிறது** த்வைதம்.

இதை நன்றாக மனதில் உள் வாங்கிக்கொண்டு பூரண இலாபம் பெறுங்கள்.

இந்த பிறவி முடிகிறபோது, "**அப்பாடா, பிறவி எடுத்ததன் பலனை அடைந்து விட்டோம். இனி பயமில்லாமல் போய்ச் சேரலாம்**" என்று உறுதியும், திருப்தியும் உண்டாகும் அளவுக்கு நல்ல மார்க்கத்தில் நாம் பயணிக்க வேண்டியது மிகவும் அவசியம்.

அதற்கு, எல்லாம் வல்ல அந்த ஈஸ்வரனின் அநுக்கிரஹம் எல்லோருக்கும் பூரணமாக நிறையட்டும் என்று வாழ்த்தி வணங்குகிறேன்.

நன்றி!

**ஓம் தத் ஸத்!**

